

# ஹநுமத் பஞ்சகம்
# மாருதி வாழ்த்துப் பஞ்சகம்
# ஹநுமார் அநுபூதி

---


இயற்றியவர் :

**அருட்கவிமணி மகாத்மா**

**காமாக்ஷி தாஸர்**

நெ. 34, அருண்டேல் தெரு

மைலாப்பூர், சென்னை-4.

# ஹனுமத் பஞ்சகம்

1

அஞ்சனா தேவி பெற்ற ஆஞ்சனேயனே போற்றி
பஞ்சமா முகங்கொண்ட பார்புகழ் மாருதி போற்றி
தஞ்சமாய் வருவோர் தாபம் தணித்தருள் தேவே போற்றி
வஞ்சமே யில்லா ருள்ளம் வசித்திடும் ஹனுமான் போற்றி

2

வாயுவின் புத்திரனான வலிமை கொள் மாருதி போற்றி
நோயினை நொடியில் நீக்கும் நோன்புடைய ஹனுமான் போற்றி
பேயினை ஓட வைக்கும் வீர வாஞ்சயனேயனே போற்றி
தாயினைப் போலக் காக்கும் தயை மிகு தேவா போற்றி

3

இராமனை இதயத்துள்ளே என்றுமே வைத்தான் போற்றி
இராமனின் நாமமொன்றே என்றுமே இசைப்பான் போற்றி
இராமனை ஓதும் எல்லா இடத்துமே இருப்பான் போற்றி
இராமனை வணங்குவோர்க்கு இரங்கு மாஞ்சனேயனே போற்றி

4

இராம ராமா ராமா என்றுமே என்றும் ஓதும்
இராமனின் தூதனாகிய இலங்கை மாநகரில் ஏகி
இராமனின் பத்தினி சீதை ஏக்கமும் நீக்கி வைத்த
இராமனின் சேவை பூண்ட ஈடிலா மாருதி போற்றி

5

சஞ்சீவி கொண்டு வந்த சிரஞ்சீவி ஹனுமான் போற்றி
செஞ்சரன் போற்றுவார் நோயைத் தீர்க்குமாருதியே போற்றி
அஞ்சலென் றபய மீயும் ஆஞ்சனேயனே போற்றி
பஞ்சமா பாதகம் தீர்க்கும் பரமனே போற்றி போற்றி

# மாருதி வாழ்த்துப் பஞ்சகம்

1

அஞ்சனை தேவி பெற்ற அரும் பெரும் புதல்வன் வாழ்க
பஞ்சமா முகமுங் கொண்ட பார் புகழ் மாருதி வாழ்க
தஞ்சமாய்ப் போற்று வார்க்குத் தனந்தரு ஹனுமான் வாழ்க
சஞ்சீவி கொண்டு வந்து சிரஞ்சீவியானோன் வாழ்க

2

வாயுவின் புத்திரனை வலிமை கொள் மாருதி வாழ்க
நோயினை நொடியில் தீர்க்கும் நோன்புடை ஹனுமான் வாழ்க
பேயினை ஓட வைக்கும் வீர வாஞ்சனேயன் வாழ்க
தாயினை போலக் காக்கும் தயை மிகு தேவன் வாழ்க

3

இராமனை இதயத்துள்ளே என்றுமே வைத்தோன் வாழ்க
இராமனின் நாமம் என்றும் இசைக்கும் மாருதியே வாழ்க
இராமனை ஓதும் எல்லா இடத்துமே இருப்போன் வாழ்க
இராமனை வணங்குவோர்க்கு எளியனும் ஹனுமான் வாழ்க

4

செயல் எல்லாம் ஜயமாய் ஆக்கும் சீராம தூதன் வாழ்க
இயமனைக் காய்ந்து காக்கும் ஈடிலா மாருதி வாழ்க
தயமற வாழவைக்கும் பக்த ஹனுமானே வாழ்க
நயமிகு ஞான மீயும் ஞான பண்டிதனே வாழ்க

5

வாழ்கவே ஆஞ்சனேயன் வாழ்கவே ராம தூதன்
வாழ்கவே வையகம் போற்றும் வாயுவின் புத்திரன் வாழ்க
வாழ்கவே ராம நாம மகிமையை உணர்ந்தோன் வாழ்க
வாழ்கவே மங்கள மீயும் மாருதி வாழ்க வாழ்க

# ஹனுமார் அநுபூதி

1

அருள்வா யெனவே ஹனுமா னுனையே
குருவாய் நிதமே குறுகிப் பணிவேன்
தருவாய் கதியுந் தனமும் புகழும்
வருவாய் அருள்வாய் வளம்யா வையுமே

2

கருவே யணுகாக் கதியே பெறவே
குருவாய் வருவாய் குறைதீர்த்திடவே
தருவாய் மணியாய் ஜயமாருதியே
வருவாய் அருள்வாய் வரமே பெறவே

3

அரிதா கியவோர் ரகுரா மனையே
பிரியா துளமீ திடுமா ருதியே
பரிவா யுனையே பணிவேன் நிதமே
புரிவாய் புரிவாய் அருளே புரியே

4

பெருவாழ் வுடனே பிணியே துமிலா
தொருவாழ் வுறவே உடனே வருவாய்
அருள்வாய் அறிவுந் தனமும் புகழும்
தருவே மணியே ஜயமா ருதியே

5

ஜயவீ ரனெனத் தலமீ தொளிரும்
ஜயமே புரியும் ஜயமா ருதியே
செயல்யா வையுமே ஜயமா கிடவே
தயவே புரிவாய் தருவாய் ஜயமே

---

சாமி பிரிண்டிங் பிரஸ், சென்னை-28.